பறித்தலும் மழித்தலுள் அடங்கும். மழித்தல் என்பதே தலைமயிரை உணர்த்தலின், அது கூறுராயினர். இதனுல் கூடாவொழுக்கம் இல்லாதார்க்கு வேடமும் வேண்டா என அவரது சிறப்புக் கூறப்பட்டது.

மணக்:— தவத்தினர்க்குத் தலையை மழித்தலும் நீட்டலும் வேண்டா; [1]உலகத்தார் கடிந்தவையிற்றைத் தாமும் கடிந்து விடுவாராயின் என்றவாறு.

இது வேடத்தால் பயனில்லை; நல்லொழுக்கமே வேண்டும் என்றது.

பரிதி:— எ - து முண்டிதமும் சடையும் வேண்டாம்; மூன்று வகை ஆசையை விடுவானுகில் என்றவாறு.

காளிங்:— எ - து நெஞ்சினுல் துறவறம் பேணக் கருதுவார் வெறுந்தலை முண்டித்தலும் சடைவளர்த்தலும் மற்று உம்மையால் தண்டு தரித்தலும் துவராடையுடுத்தலும் பிறவுமாகிய புறக்கோலம் புனைய வேண்டுவது இல்லை. உலகத்து உயர்ந்தோராகிய தமது உணர்விஞலும் தாங்கற்றுணர்ந்த நூலிஞலும் இவைஇவை தகா என்று ஒரீஇயவற்றைத் தாமும் அவ்வாறு ஒழித்து விடின் என்றவாறு.

இனி மற்றிவ்வாறன்றி முன்னம் துறவு பூண்டு ஒழுகுவானும் அங்ஙனம் ஒழுகுகின்றது மறந்து இடங்கண்டுழி பிறன்பொருள் கவரக்கருதும் எனில், முன்புதான் ஒழுகிப் போந்த ஒழுக்கமும் கெட்டுப்பெரிதும் குற்றம் தங்குமாதலால் இதன் பின்னரே அதன் [2]தகாமையை அறிவிக்கின்றது.

## ஒப்புமைப்பகுதி:

“வீடு வேண்டி விழுச்சடை நீட்டல் மெய்ம்
மூடு கூறையின் மூடுதல் வெண்டலை
ஓடு கோடல் உடுத்தல் என்று இன்னவை
பீடிலாப் பிறவிக்கு வித்து என்பவே. —சீவக. 1427.

[1]உலகம் பழித்தது ஒழித்துவிடின் என்பதற்குப் பெரியோர்கள் தபசுக்கு ஆகாது என்று ஜிநாகமத்துச் சொன்னவைகளைத் தாங்களும் கடிந்து விடுகிறதே செய்யவேணும் என்று பொருள் உரைப்பர் —**கவிராஜபண்டிதர்.**

[2] தகாமையை என்றது கள்ளாமை என்ற அடுத்த அதிகாரத்தை.